# வேதமும் உபநிடதமும்





ீ சுவாமி சிவானந்தா

# வேதமும் உபநிடதங்களும்

இயற்றியவர்:

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம்:

**திரு. R. வரதராஜன், B.A., B.T.**

## சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு






## தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் சேலம் ஜில்லா

விலை] 1987 [ரூ. 2-00

SIVANANDA CENTENARY PUBLICATION



* O *

Translation of

**"VEDAS & UPANISHADS"**

[ From 'BLISS DIVINE' ]

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of:*

A humble devotee of

GURUDEV SIVANANDA

Printed at The Literary Press, Salem - 636 001.

3

# வேதமும், உபநிடதங்களும்

## வேதங்கள்

வேதம் என்ற சொல் 'வித்' என்ற சொல்லிலிருந்து பிறந்தது. அதற்கு 'அறிதல்' என்பது பொருள். வேதம் என்றால் 'ஞானம்' அல்லது 'அறிவு' என்பது பொருளாகும். மறைநூலைக் குறிக்கும்போது அதற்கு 'ஞானத்தைக் குறிக்கும் நூல்' என்பது பொருளாகும். வேதங்கள் என்பன இந்துக்களுக்குச் செயல்முறையில் பயன்படும் மறை நூல்களாகும். ஸ்மிருதிகள், இதிகாசங்கள், புராணங்கள், ஆகமங்கள், தரிசனங்கள் ஆகிய ஐவகை மறைநூல் தொகுப்புகளுக்கும் ஆதாரமானவை வேதங்கள். ஆன்மீக மல்லாத விஷயங்களுக்கும் உலகியல் வியவகாரங்களுக்கும் தொடர்பான அறிவுக்குக் கூட ஆதாரம் வேதங்களே. வேதங்கள் இந்திய நாட்டின் அறிவுக் களஞ்சியங்கள். வேதங்கள் உலகமுள்ளவரை மறையாத புகழ்வாய்ந்தவை.

வேதங்கள் தோற்றமும் முடிவும் இல்லாமல் இறைவனால் சொல்லப்பட்ட உண்மைகள். வேதங்கள் என்றும் நிலைபெற்றிருக்கும் உண்மைகள். அவைகள் இறைவனால் இந்திய நாட்டிலுள்ள பண்டைக்காலத்து ரிஷிகளுக்கு கூறப்பட்டவை. 'ரிஷி' என்றால் 'முற்றிலும் உணர்ந்தவர்' என்று பொருள்படும். அது 'பார்த்தல்' என்ற பொருளுள்ள 'த்ரிஸ்' என்ற சொல்லிலிருந்து தோன்றியது; ரிஷி என்பவர் 'எண்ணம்' அல்லது மந்திரத்தைக்கண்ட 'மந்த்ர—த்ரஷ்டர்' அவருக்குத் தோன்றிய எண்ணம் அவருக்குச் சொந்தமானதல்ல. அவர் அந்த உண்மையைப் பார்த்து அல்லது கேட்டு அறிந்தார் எனவே கேள்வி வாயிலாக (காதால் கேட்பதன் மூலம்) தோன்றிய வேதம் 'ஸ்ருதி' எனப்படும். ரிஷி அதை எழுதி வைத்துக் கொள்ளவில்லை. அது அவர் மனதில் புதிதாகத் தோன்றவில்லை. ஏற்கனவே இருந்த ஓர் உண்மையை அவர் கண்டறிந்தார். அந்த எண்ணத்தை ஆன்மீகமாகக் கண்டறிந்தவர்தாம் அவர். வேதங்களை உற்பத்தி செய்தவர்

(எழுதியவர்) அவரல்ல. ஸ்ருதிகள், வேதங்கள் அல்லது அம்நயம் என்று சொல்லப்படுகின்றன. இந்துக்களுடைய மதம் இறைவனால் சொல்லப்பட்ட தெய்வீக உண்மைகளாகிய வேதங்களால் தோன்றியது. அவைகள் மனதில் தன்னிச்சையாக நேரடியாகத் தோன்றியமையால் 'அபௌருஷேய' தனிப்பட்ட ஒருவரால் எழுதப்படாமல் முழுதும் தெய்வீகமானது என்று கருதப்படுகின்றன. எனவே வேதங்கள் அழிவற்ற அமரத்தன்மை பெற்றவை. அவைகள் எக்காலத்தும் நிலைத்திருக்கும் ஆன்மீக உண்மைகள். வேதங்கள் தெய்வீக ஞானமே உருவானவை. நூல்களை அழித்துவிடலாம். ஆனால் அறிவு அல்லது ஞானத்தை அழிக்க முடியாது. அறிவு என்றும் நிலைத்து இருப்பது. வேதங்கள் இறைவன் விடும் மூச்சிலிருந்து தோன்றியவை. அவைகளுக்கு முதலும் கிடையாது, முடிவும் கிடையாது.

வேதங்கள் பண்டையகாலத்து முனிவர்களுடைய ஆன்மீக அனுபவங்களைக் குறிக்கின்றன. உலகிலுள்ள மற்ற மதங்கள் தத்தம் அடிப்படை உண்மைகள் இறைவனால் தெரிந்து எடுக்கப்பட்ட குறிப்பிட்ட தூதர்களின் மூலமாக உலகிற்கு எடுத்துக் கூறப்பட்டவை என்று சொல்லப்படுகின்றது. ஆனால் வேதங்கள் யாராலும் சொல்லப்படவில்லை. அவைகள் இறை ஞானம் அடங்கிய உண்மைகளாதலால் வேதங்களுக்கு வேதங்களே தான் ஆதாரமாகின்றன.

பிரம்மதேவன் இந்த தெய்வீக ஞானத்தை முனிவர்களுக்கு வழங்கினார். முனிவர்கள் அந்த ஞானத்தை மக்களிடையே பரவச் செய்தார்கள். வேதகாலத்து முனிவர்கள் மிகச்சிறந்த ஞானிகள், அவர்கள் பிரம்மம் அல்லது சத்தியத்தை நேரடியாகத் தங்கள் யூகித்தறியும் இயல்பால் கண்டார்கள். அவர்கள் இறையருள் பெற்ற எழுத்தாளர்கள். அவர்கள் தான் மிகவுயர்ந்த முறை பெற்ற ஒரு மதத்தினைப் படைத்தார்கள். அதிலிருந்துதான் மற்ற மதங்களைத் தோற்றுவித்தவர்களும் மதாச்சாரியர்களும் தங்களுடைய உணர்ச்சி பூர்வமான அறிவைப் பெற்றார்கள்.

வேதங்கள் மனிதனுடைய நூலகத்திலுள்ள மிகப் பழமையான நூல்கள். மதங்கள் எல்லாவற்றிலும் அடங்கியுள்ள உண்மைகள் வேதங்களிலிருந்து எடுத்துக்கொள்ளப் பட்டவையே. ஆராய்ச்சி செய்தால் முடிவில் அவ்வுகள் வேதங்களில் இருப்பதைக் காணலாம். வேதங்கள் மதமாகிய நீருற்று தோன்றும் இடம். மதங்கள் எல்லாவற்றின் ஆதாரத்தின் இருப்பிடமும் வேதங்கள். மதத்தின் தோற்றம் தெய்வீகமானது. மதம் ஆதிகாலத்தில் இறைவனால் மனிதனுக்கு உணர்த்தப்பட்டது. அது வேதங்களின் மூலமாக உருவாக்கப்பட்டுள்ளது.

## நான்கு வேதங்களும் அவற்றின் பிரிவுகளும்:-

வேதம் நான்கு பெரிய நூல்களாகப் பிரித்து அமைக்கப் பட்டுள்ளது. ரிக் வேதம், யஜுர் வேதம், சாம வேதம் அதர்வண வேதம் எனப்படும். யஜுர் வேதம், சுக்ல யஜுர் வேதம், கிருஷ்ண யஜுர் வேதம் என இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது, கிருஷ்ண அல்லது தைத்ரீய யஜுர் வேதம் என்பது பழமையானது. சுக்ல அல்லது வாஜசனேய யஜுர்வேதம் பிற்காலத்தில் சுடரொளி வீசும் சூரியதேவனிடமிருந்து யாக்ஞவல்கிய முனிவர் அறிந்த உண்மைகளடங்கியது,

ரிக் வேதம் இருபத்தொரு பிரிவுகளாக அமைக்கப் பட்டுள்ளது. யஜுர் வேதம் நூற்றொன்பது பிரிவுகளாக அமைக்கப்பட்டுள்ளது. சாம வேதத்தில் ஆயிரம் பிரிவுகள் அமைந்துள்ளன. அதர்வண வேதத்தில் ஐம்பது பிரிவுகள் உள்ளன. மொத்தத்தில் வேதமானது ஆயிரத்து நூற்று எண்பது பிரிவுகளாக அமைந்துள்ளது.

ஒவ்வொரு வேதத்திலும் நான்கு பாகங்கள் உள்ளன. அவை மந்திர சம்ஹிதை, பிராமணங்கள், ஆரண்யகங்கள், உபநிடதங்கள் எனப்படும். மனிதனுடைய வாழ்க்கையிலுள்ள நான்கு ஆசிரமங்கள் பொருத்தமாக இருக்குமாறு நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

வேதத்தில் கூறப்பட்ட இறைவனை உணர்ந்து பாராட்டி இவ்வுலகாயத வாழ்க்கையில் தேவையானவற்றைப் பெறவும், மறுமையில் இன்பம் பெறவும் பாடல்களாக எழுதப்பெற்றவை மந்திர சம்ஹிதை எனப்படும். அது பிரார்த்தனைகளும், துதிப்பாடல்களும், பலவகைப்பட்ட தேவதைகளை ஆராதித்துத் துதிக்கும் பாடல்களும் அடங்கிய பகுதியாகும். மந்திரங்களடங்கிய இந்தப்பகுதி பிரம்மசாரிகளுக்குப் பயனுள்ளதாகும்,

பிராமணங்கள் சடங்குகள் கிரியைகள் ஆகியவைகளைச் செய்வதற்குத் துணைபுரியும். யக்ஞம் அல்லது வேள்வியல் மந்திரங்களைப் பயன்படுத்தும் முறையை விளக்கமாகக் கூறும் பகுதியே இது. இந்தப்பகுதி இல்லறவாசிகளுக்குப் பயன்படக்கூடியது.

ஆரண்யகம் என்பதை வனநூல் எனலாம், அழகான வனக்காட்சிகளையொத்த இந்தப்பகுதி சடங்குகள், கிரியைகள் ஆகியவற்றின் விளக்கங்களைத் தத்துவரீதியாக எடுத்துக் காட்டுகின்றது. வானபிரஸ்த நிலையில் உள்ளவர்கள் சன்னியாசம் அல்லது துறவற நிலைக்குத் தயார் செய்து கொள்வதற்கு இந்தப்பகுதி உதவுகிறது.

உபநிடதங்கள்தாம் வேதத்தின் மிகமுக்கியமான பகுதியாகும். வேதத்திலுள்ள ஞானத்தைப்பற்றிய சாரம் இவைகளில் அடங்கியுள்ளது. உபநிடதத்தில் கூறப்பட்டுள்ள தத்துவம் மிகவுயர்ந்தது, நுண்ணியது, மேலானது, உள்ளத்தில் கிளர்ச்சியை ஏற்படுத்துவது. தனிப்பட்ட ஆன்மா, பரமாத்மா ஆகிய இரண்டின் மாறுபாடில்லாத ஒன்றுபட்ட தன்மையைக் கூறுகின்றன. மிகவும் உயர்ந்த ஆன்மீக உண்மைகளை அவை நமக்கு எடுத்துக்காட்டும் ஒளிவிளக்குகளாகும், உபநிடதங்கள் துறவிகளுக்கு உபயோகமாகும் பகுதியாகும்.

வேதம் கூறும் பொருள் கர்ம காண்டம், உபாசன காண்டம், ஞான காண்டம், என்று மூன்று பகுதிகளாகப்

பிரிக்கப்பட்டுள்ளது. கர்ம காண்டம் அல்லது செயல்முறைகளைப் பற்றிய பகுதியில் பல்வகைப்பட்ட வேள்விகளைப் பற்றியும் சடங்குகளையும் கிரியைகளைப் பற்றியும் கூறப்படுகிறது.

உபாசன காண்டம் அல்லது வழிபாட்டு பகுதி பல வகையான வழிபாடுகளைப் பற்றியும், தியானத்தைப் பற்றியும் எடுத்துக் கூறுகிறது. ஞான கண்டம் அல்லது அறிவுப்பகுதி நிர்குணப் பிரம்மத்தைப் பற்றிய மிகவுயர்ந்த ஞானத்தை விளக்குகிறது. மந்திரங்களும், பிராமணங்களும் கர்ம காண்டத்தைச் சேர்ந்தவை. ஆரண்யகங்கள் உபாசன காண்டத்தைச் சேர்ந்தவை. உபநிடதங்கள் ஞான காண்டத்தைச் சேர்ந்தவை.

## மந்திர சம்ஹிதைகள் :

ரிக் வேத சம்ஹிதை இந்து மதத்தின் மிக மேலானதும், மிகச் சிறந்ததும், மிகப் பழமையானதுமான நூலாகும். அதை மிகச் சிறந்த மறைநூல் எனலாம். அதை மனதாரப் போற்றத்தவறும் இந்தியன் எவனும் இருக்கமாட்டான். அதன் நடை, மொழி, இசை ஆகியவை மிகவும் எழிலோடு கூடியவை, விந்தையானவை. அமரத்தன்மை வாய்ந்த அதன் மந்திரங்களில் இல்வாழ்க்கையின் அரிய உண்மைகள் அடங்கியுள்ளன. உலகிலுள்ள மறை நூல்களடங்கிய இலக்கியப் பகுதியின் மிகச் சிறந்த பொக்கிஷம் என்றே அதைக் கூறலாம். அதன் ஆசாரியன் ''ஹோதா'' என்று சொல்லப்படுவார்.

யஜுர்வேத சம்ஹிதையில் பெரும் பகுதி உரைநடையில் இருக்கின்றது. அது 'அத்வர்யு' என்ற யஜுர்வேத ஆசார்யாரால் ரிக் வேத மந்திரங்களுக்குத் துணையாக, சடங்குகள் கிரியைகள், வேள்விகள் ஆகியவற்றின் விளக்கங்களைக் கூறுவதற்கு ஏற்றபடி அமைந்துள்ளது.

சாமவேத சம்ஹிதை பெரும்பாலும் ரிக் வேத சம்ஹிதையிலிருந்து கடன் வாங்கப்பட்டது. வேள்வியின் போது 'உத்கதர்' என்ற சாமவேத ஆசார்யாரால் இசைக்கப் படுவது இது.

அதர்வண்வேத சம்ஹிதை 'பிரம்மா' என்ற அதர்வண வேத ஆசார்யரால், மற்ற மூன்று ஆசார்யர்களால் வேள்விகளின்போது எதிர்பாராது ஏற்படும் தவறான உச்சரிப்புகளையும் தவறான கிரியைகளையும் சரியாகத் திருத்துவதற்காக ஏற்பட்டதாகும்.

**பிராமணங்களும், ஆரண்யங்களும் :**

ஐத்ரேய, சாங்க்யாயன பிராமணங்கள் இரண்டும் ரிக் வேதத்துக்குரியவை. "ரிக் வேதம் உலகத்திலுள்ள நூல்களுக்குள்ளே மிகவும் பழமையானது. பிராமணங்களிலுள்ள புனிதமான துதிப்பாடல்களுக்கு இணையானவை உலகத்திலுள்ள வேறு எந்த இலக்கியத்திலும் இல்லை. அவற்றை அழியாமல் பாதுகாத்து வைத்திருப்பது மிகவும் விந்தையான செயல் என்றே சொல்லலாம்" என்று மாக்ஸ்முல்லர் என்ற அறிஞர் 'பண்டைய சமஸ்கிருத இலக்கியத்தின் வரலாறு' என்ற தம் நூலில் கூறுகிறார்.

சதபத பிராமணம் சுக்ல யஜுர் வேதத்தில் உள்ளது. கிருஷ்ணயஜுர் வேதத்தில் தைத்ரீய, மைத்ராயனு பிராமணங்கள் அடங்கியுள்ளன. தண்டய அல்லது பஞ்சவிம்ச, ஷட்விம்ச, சாண்டோக்ய, அத்புத, ஆர்ஷேய, உபநிஷத் பிராமணங்கள் சாம வேதத்தில் உள்ளவை. அதர்வண வேதத்திலுள்ளது கோபத பிராமணம் எனப் படும். ஒவ்வொரு பிராமணத்திலும் ஒவ்வொரு ஆரண்யகம் இருக்கின்றது.

**உபநிடதங்கள் :**

உபநிடதங்கள் என்பவை வேதங்களின் முடிவான பகுதிகள் எனப்படும். அவைகளில் கூறப்பட்டுள்ள

அறிவுரைகள் வேதாந்தம் எனப்படும். உபநிடதங்கள் வேதங்களின் சாரம் அல்லது இலட்சியம் எனப்படும். அவைகள்தாம் இந்து மதத்தின் ஆதாரமான அஸ்திவாரம் ஆகும்.

ரிக் (21) யஜுர் (109) சாம (1000) அதர்வண (50) வேதங்களுக்கு எத்தனை சாகைகள் என்ற பிரிவுகள் இருக்கின்றனவோ அத்தனை உபநிடதங்கள் இருக்கின்றன.

அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம், தூய அத்வைதம் முதலான தத்துவங்களை உபதேசித்த பல்வேறு பிரிவினர் உபநிடதங்களின் மேலான ஆதாரத்தை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய வெவ்வேறான விளக்கங்களை எடுத்துக் கூறிய போதிலும், உபநிடதங்களின் உண்மையான கட்டளைகளுக்குக் கீழ்க் படிந்து அவைகளை ஒத்துக்கொண்டுள்ளனர். அவர்கள் உபநிடதங்களை அடிப்படையாகக் கொண்டு தத்தம் கொள்கைகளை அமைத்துக் கொண்டுள்ளனர்.

மேல்நாட்டு அறிஞர்களும் உபநிடதங்களைக் கண்டறிந்த ஞானிகளை புகழ்ந்துபோற்றிக் கூறுகின்றனர். மேலைநாட்டினர் மரப்பட்டைகளை உடுத்தி ஆழ்ந்த அறியாமையில் மூழ்கியிருந்த காலத்தில், உபநிடதங்களை வழங்கிய ஞானிகள் முழுமுதற் கடவுளுடன் தொடர்பு கொண்டு அழியாத பேரின்பத்தில் மூழ்கித் திளைத்து, மிகவும் பண்பாடும் நாகரிகமும் உடையவர்களாக விளங்கினார்கள்.

ஈசா, கேன, கடோ, பிரஸ்ன, முண்டக, மாண்டூக்ய, ஐத்ரேய, தைத்ரிய, சாண்டோக்ய, பிரஹதாரண்யக, கௌசிதகி, சுவேதாஸ்வதார உபநிடதங்கள், உபநிடதங்களுள் முக்கியமானவை. இவைகள் மிகவும் சிறந்த ஆதாரங்களாக விளங்குகின்றன.

உபநிடத்தங்களிலுள்ள அடிப்படை உண்மைகள் உங்கள் அனைவருக்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாக விளங்கட்டும். வேதங்களின் அன்னையாகிய, காயத்ரிதேவி புராதனமான உபநிடத ஞானப் பாலை உங்களுக்கு வழங்கட்டும்!

---

## உபநிடதங்கள்

வேதாந்தத்தின் மிகவுயர்ந்த கருத்துக்கள் நிறைந்தவையும் உலகப் பொதுவுண்மைகளாலாகிய ஞானமும் அடங்கிய தத்துவநூல்கள்தாம் உபநிடதங்கள். நீண்ட நெடுங்காலத்துக்குமுன் இந்திய நாட்டில் வாழ்ந்த ஞான திருஷ்டியோடு கூடிய முனிவர்கள் வாழ்க்கையின் அடிப்படை உண்மைகளை அறிந்துகொள்ள மிகவும் முயற்சி செய்தார்கள். மனிதன், பிரபஞ்சம் ஆகியவைகளின் தோற்றம், இயல்பு, முடிவு ஆகியவற்றைப்பற்றிய பிரச்னைகளைத் தீர்க்க முயற்சி செய்தார்கள். தெளிவு அல்லது ஞானம் வாழ்க்கை ஆகியவற்றின் பொருளையும், மதிப்பையும் தெரிந்துகொள்ள முயற்சி செய்தார்கள். வாழ்க்கை, உலகம் ஆகியவைகளிலுள்ள கடினமான பிரச்னைகளுக்குரிய தீர்வையும், தனிப்பட்ட ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்குமுள்ள தொடர்பையும் அறிய முயன்றார்கள். "நான் யார்? பிரபஞ்சம் அல்லது சம்சாரம் என்பது என்ன? நாம் எங்கிருந்து வந்தோம்? நாம் எங்கு தங்கியிருக்கிறோம்? முடிவில் நாம் எங்கு செல்லப் போகிறோம்? அமரநிலை, விடுதலை, பக்குவம், நிலையான பேரின்பம், நிலைபெற்ற அமைதி, ஆத்மா, பரமாத்மாவாகிய பிரம்மம் (பிறப்பு, இறப்பு, மாறுதல் ஆகியவை இல்லாமல் தானே இயங்குவது) என்பவை உண்மையில் இருக்கின்றனவா? பிரம்மத்தை அல்லாத அழிவில்லாத அமரநிலையை அடைவது எப்படி?" என்பவை போன்ற சிந்தனையைத்தூண்டும் பிரச்னைகளுக்கு திருப்திகரமான விடைகளைக்காண அக்கறையுடன் பாடுபட்டார்கள்.

உள்ளத்தில் கிளர்ச்சியைத் தூண்டுவதும், ஒரு விந்தையான உணர்வைக்கொடுப்பதும், அறிவைத்தூண்டுவதுமான

உபநிடதங்களைப்போல் உலகில் வேறு எந்த நூலும் இல்லை. கிழை நாடுகளிலும் மேலைநாடுகளிலும் உள்ள அநேக மக்களுக்கு மனத்தேறுதல் அளிப்பதற்குக் காரணமாக இருப்பது உபநிடதங்கள் உபதேசிக்கும் தத்துவமாகும். இந்த உலகத்தின் வரலாற்றிலேயே எக்காலத்திலும் உபநிடதங்களிலுள்ள அறிவுரைகளைவிட மிகவுயர்ந்த நுண்ணிய கருத்துக்களை எண்ணிப்பார்க்க மனித அறிவால் முடியவில்லை. அவைகளில் தத்துவக்கருத்துக்கள் நிறைந்து காணப்படுகின்றன. அவைகள் தத்துவக்கருத்துக்களின் சிகரமாக கருதப்படுகின்றன. அவற்றிலடங்கிய மறைமுகமான கருத்துக்களின் மதிப்பு மிகவும் உயர்ந்தது. அவற்றிலுள்ள செய்யுட்கள் கருத்தாழம் மிக்கவை. மிகவும் அழகான நடையுடன் கூடியவை. உலகத்திலுள்ள மதங்களிலும், பல்வேறு தத்துவங்களிலும் உபநிடதங்களின் ஆற்றல்மிக்க கொள்கைகள் நிறைந்து செயல்பட்டுள்ளன, இனியும் செயல்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மக்களின், விஞ்ஞான, தத்துவ, ஆன்மீகத் தேவைகளை நிறைவு செய்ய உதவும் உண்மையான கொள்கையை உபநிடதங்கள் வெளிப்படுத்துகின்றன.

## உபநிடதங்களின் தோற்றம் :

பண்டையகால முனிவர்கள், நேரான வாழ்க்கை, தவம், தம்மையே கூர்ந்து நோக்கல், தம்மையே அலசி ஆராய்ந்த விசாரணை, தூயதான ஆத்மாவை தியானித்தல் ஆகிய செயல்களைப் பயின்று, ஆன்மீகத்தெளிவு பெற்றனர்கள். அவர்கள் உள்ளத்தில் ஏற்பட்ட அனுபவங்கள் நேரடியானவை, அவர்களே யூகித்தறிந்தவை, விந்தையானவை. அறிவியலின் எந்தப்பிரிவாலும் அவற்றில் குற்றம் காண முடியாது. அவர்களின் முயற்சிகள் அனைவற்றிற்குமான இறுதி லட்சியம் அதுவே என்று தத்துவஞானிகள் அனைவரும் உறுதியாகக் கூறியுள்ளனர். அந்த ஆழ்ந்த கருத்துக்கள் உபநிடதங்கள் என்னும் நூல்களின் வடிவில் உள்ளன.

உபநிடத ஞானம் அறியாமையையும், சம்சார பந்தத்தையும் அழித்துவிடுகிறது. பிரம்மத்தைப் பற்றிய ஞானம் உபநிடதம் எனப்படுகிறது. ஏனென்றால் அது பிரம்மத்தினிடம் அழைத்துச் செல்வதோடு, சாதகர்கள் பிரம்மத்தை அடைய உதவுகிறது. உபநிடதக் கருத்துக் கள் அடங்கிய நூல்களுக்கும் உபநிடதங்கள் என்ற பெயரே அளிக்கப்பட்டுள்ளது.

உபநிடதங்கள் வேதங்களிலுள்ள ஞான காண்டப் பகுதியில் அடங்கும். அவைகள் என்றுமுள்ளவை. அவை இரண்யகர்ப்பன் என்னும் பிரம்மதேவன் வாயிலிருந்து தோன்றியவை. இந்த உலகம் தோன்றுவதற்கு முன்பிருந்தே அவை இருக்கின்றன.

மிக நுணுக்கமானதும் விந்தையானதுமான தெய்வீக ஞானத்தின் இருப்பிடம் உபநிடதங்கள். கடக்க முடியாத சம்சாரத்திலிருந்து தப்பிச் செல்ல உதவும் கருவிகளாகும். அவை உலகப் பொதுமறை நூல்கள். அவை எல்லா இனங் களிலும் எக்காலத்திலும் மதங்களையும் சத்தியத்தையும் நேசிக்கும் மக்களின் மனதைக் கவர்ந்துள்ளன. வேதாந்தம், ஞானயோகம், ஆன்மீகத் தெளிவை அடைய விரும்பும் சாதகர்களுக்கு ஒளிவிளக்குகள் போன்று உதவக்கூடிய நடைமுறைக் குறிப்புகள் ஆகியவைகளைப் பற்றிய மிக நுண்ணிய இரகசியங்கள் உபநிடதங்களில் அடங்கியுள்ளன. உபநிடதங்களின் புகழையும் சிறப்பையும் சொற்களால் முழுவதும் வருணிக்க முடியாது. ஏனென்றால் மொழி முழுமையானதல்ல, சொற்கள் சொற்பமானவை. உபநிடதங்கள் மனித குலத்தின் மன அமைதிக்கும், தேறுதலுக்கும் பெருத்த அளவில் உதவி செய்துள்ளன. அவைகள் மனிதனின் உள்ளத்தில் கிளர்ச்சியை ஏற்படுத்தி அவனுடைய நிலையை மேன்மையடையச் செய்கின்றன. பல்லாயிரக்கணக்கான மக்கள் உபநிடத நூல்களிலிருந்து உணர்வையும், ஆலோசனையையும் பெற்றிருக்கிறார்கள். அவைகள் வேதங்களின் சாரம். அவை அளவற்ற மதிப்பை உடைய ஞானக் கருவூலங்களாகும்.

## குறிக்கோளும் இலட்சியமும் :

வேதங்கள் ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என நான்கு வகைப்படும் வேதங்களில் எத்தனை சாகைகள் என்னும் பிரிவுகள் இருக்கின்றனவோ அத்தனை உபநிடதங்களும் இருக்கின்றன. ரிக், யஜுர், சாம, அதர்வண வேதங்களில் முறையே 21,109,1000,50 பிரிவுகள் இருக்கின்றன. எனவே மொத்தம் ஆயிரத்து நூற்று எண்பது (1180) உபநிடதங்கள் இருக்கின்றன.

முக்திகோபநிடதத்தில் இராமபிரான் அனுமானிடம் கீழ்க்கண்டவாறு சொல்லுகிறார்: ''ஒருவர் விடுதலை அல்லது மோட்சத்தை அடைய ஒரே வழி மாண்டூக்ய உபநிடதத்தில் கூறப்பட்ட அறிவுரைகளை நன்கு உணர்ந்து கொண்டு, அவற்றைப் பற்றி தியானம் செய்வதுதான். சாதகர்கள் மோட்சம் அடைய அதுவே போதுமானது. அதனால் உனக்கு ஞானம் அடைய முடியவில்லையானால், பத்து உபநிடதங்களையும் படி. அதன் பிறகும் உன்னுடைய ஞானம் உறுதிபெறவில்லையானால், முப்பத்திரண்டு உபநிடதங்களிலும் கூறப்பட்டுள்ள அறிவுரைகளைப் படித்து அவற்றைப் பற்றி தியானம் செய். இந்த உடலுடனேயே மோட்சம் அடையலாம். உடலைவிட்டு நீங்கி விடுதலைபெற விரும்பினால் நூற்றெட்டு உபநிடதங்களையும் படி''.

கீழ்க்கண்ட இரண்டு கருத்துக்களும்தான் உபநிடதங்கள் அனைத்திலும் சிறப்பாகக் கூறப்படுகின்றன. (1) இறுதியான மோட்சம் என்பது பிரம்ம ஞானத்தை அடைவதால்தான் பெறமுடியும். (2) பகுத்தறிதல், விருப்பு வெறுப்பின்மை, அறுவகைப் பண்புகள், விடுதலை வேட்கை ஆகிய நான்கையும் உடையவர்களால்தான் பிரம்ம ஞானத்தை அடைய முடியும். இந்த இறுதி ஐக்யமாகிய தத்துவத்தைப் பற்றி உபநிடதங்கள் எடுத்துக் கூறுகின்றன.

மனித வாழ்க்கையின் இறுதி லட்சியம் பிரம்மத்தை அடைவதுதான் என்று உபநிடதங்கள் கூறுகின்றன.

ஆன்மீக ஞானம்தான் அறியாமையை அழித்து, அமரநிலை, நிரந்தரமான பேரின்பம், நீடித்த அமைதி ஆகியவற்றை அளிக்கவல்லது. பிரம்ம ஞானத்தால்தான் துயரங்கள் மனச்சோர்வு, வருத்தங்கள் ஆகிய அனைத்தையும் போக்க முடியும்.

## அனுபந்த சதுஷ்டயம் :—

உபநிடதங்களில் கூறப்படும் பொருள் (விஷயம்) மிகவுயர்ந்த பிரம்மம் அல்லது பரமாத்மா ஆகும். அதனால் அடையப்படும் பயன் (பிரயோஜனம்) மோட்சம் அல்லது அழியாத அமரநிலையை அடைதலும் சம்சாரமாகிய பந்தத்தினின்றும் விடுபடுதலும் ஆகும். (அத்யந்த சம்சார நிவ்ருத்தியும் பிரம்ம பிரபு விருத்தியும்). உபநிடதங்களின் மூலமாக இதைப்பெறுதல் தொடர்பு (சம்பந்தம்) என்று சொல்லப்படுகிறது. உபநிடதத்தைப் படிக்கவும், பிரம்மத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கவும், ஆன்மீக தியானத்தில் ஈடுபடவும், விடுதலை மார்க்கங்கள் நான்கை யும் பயில்பவனே தகுதியுடையவன் (அதிகாரி) ஆவான். இதுதான் அனுபந்த சதுஷ்டயம் எனப்படும்.

## உபநிடதங்களிலுள்ள வித்யைகள் :—

பிரம்மத்தைப் பற்றிய வித்யைகள் அல்லது விந்தையான தியானங்களைப் பற்றி சாண்டோக்ய, பிரஹதாரண்ய உபநிடதங்களிலும் மற்ற உபநிடதங்களிலும் கூறப் பட்டுள்ளது. சத்வித்யை, பூமவித்யை, சாண்டில்யவித்யை, தகரவித்யை, வைஸ்வநர வித்யை, பஞ்சாக்னி வித்யை, உத்கித வித்யை, புருஷ வித்யை, சம்வர்க்க வித்யை, மது வித்யை, பிராண வித்யை, உபகோசல வித்யை, அக்ஷி வித்யை, ஆதித்ய வித்யை, சத்யகாம வித்யை, ஆகாச வித்யை, சுவேதகேது வித்யை ஆகியவைகள் சாண்டோக்ய உபநிடதத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. மைத்ரேயி வித்யை, அக்ஷர வித்யை, அந்தராதித்ய வித்யை, உஷஷ்டகோள

வித்யை, உத்யாலக அருண்ய வித்யை, ஜோதிஷம் — ஜோதிர் வித்யை ஆகியவை பிரஹதாரண்ய உபநிடதத்தில் கூறப்பட்டுள்ள முக்கியமான வித்யைகளாகும். பிருகு வாருணி வித்யை, ஆனந்தமயி வித்யை, சத்ய — ஞான — அனந்த வித்யை ஆகியவை தைத்ரிய உபநிடதத்தில் கூறப் பட்டுள்ளன. சோடசகலா வித்யை பிரஸ்னோப நிடதத்தில் கூறப்பட்டுள்ளது. இவையும் சிறப்பானவைகளே.

இந்த வித்யைகள் அனைத்தும் ஒருவனை பொய்யான நிலையிலிருந்து உண்மையான நிலைக்கும், இருளிலிருந்து ஒளிக்கும், மரணத்திலிருந்து அமிர்தமயமாகிய அமர நிலைக்கும் அழைத்துச் செல்கின்றன. இவைகள் ஆன்மாவை கிரம முக்தி அல்லது சத்யோ முக்தியின் மூலமாக மூல அக்ஞானத்திலிருந்து மிகவுயர்ந்த பரபிரம்மத்தினிடம் அழைத்துச் செல்கின்றன. இந்த வித்யைகள் சகுண பிரம்மத்தையும் நிர்க்குணப் பிரம்மத்தையும் தியானத்தின் மூலம் வழிபட உதவுகின்றன. தியானங்களில் மூன்றுவகை உண்டு என்று பிரம்ம சூத்திரங்கள் கூறுகின்றன. அவை யாவன (1) நிர்குண (2) சகுண (3) பிரதிகா (கட்டு பாடற்றதும் குணங்களை கடந்ததும், கட்டுப்பாடு சில வரையறைகளுக்குட்பட்டது, சின்னம் அல்லது வடிவங் களுடையது) பெரும்பாலான வித்யைகள் பரமாத்மாவின் இயல்பையும், பலவிதமான தொடர்புள்ள கருத்துக்களையும் பற்றிக் கூறுகின்றன. இந்த எல்லைக்குட்பட்டிருந்தாலும், நிர்க்குண தியானத்துக்கும் இந்த வித்யைகளைப் பயன் படுத்திக்கொள்ளலாம். ஆனால் தியானம் செய்பவர் பரம் பொருளின் உண்மையான இயல்புகளை மட்டும் கருத்தில் கொண்டு அதிலுள்ள வெவ்வேறு நிலைகளையும், மாறுபட்ட இயல்புகளையும் விட்டுவிடவேண்டும். எனினும் பிரம்ம வித்யை, மைத்ரேயி வித்யை போன்றவை, வேதாந்திகளின் அகம்கிரஹ உபாசனைக்கும் நிர்குண தியானத்துக்கும் மிகவும் உதவுகின்றன. தியானம் செய்பவரின் மனநிலைக்கு ஏற்ற ஒரே வித்யையைப் பயன்படுத்திதான் தியானத்தைப் பயில்வேண்டும். இந்த தியானங்களின் விளைவாக அத்யந்த

சுகம் அல்லது மேலான இன்பம், சம்சாரத்திலுள்ள பிறப்பு, வாழ்க்கை, இறப்பு ஆகிய துன்பங்களின்றும் விடுதலை ஆகியவற்றைப் பெறலாம். இந்த வித்யைகளை ஆன்மீகத் தகுதிபெற்ற குருவின் மூலமாக நேரடியாக தீட்சைபெறாமல் (உபதேசிக்கப்படாமல்) பயின்று தியானம் செய்யமுடியாது. வழிகாட்டி ஒருவரின் துணையில்லாமல் இந்தச் சிக்கலானவையும் கடினமானவையுமான வித்யை களை ஒருவர் புரிந்து கொள்ள முடியாது.

---

## மதம்

மதம் என்பது இறைவன், உலகம், மனிதன் ஆகிய மூன்று அடிப்படைத் தத்துவங்களின் உறவாகும். மதம் இவ்வுலகத்தில் யாத்திரையாக வந்த மனிதன் களைப் படையும்போது அவனுக்கு ஆறுதல் கொடுக்கின்றது. இந்த உலக வாழ்க்கையின் இரகசியத்தை மனிதனுக்கு மதம் விளக்கிச் சொல்கிறது. என்றும் அழியாத பேரின்ப வீட்டுக்கு அது மனிதனுக்கு வழிகாட்டுகிறது.

மதம் என்பது இந்த உலக வாழ்க்கையை வெறுத்து ஒதுக்குவதல்ல. அது வாழ்க்கையின் நிறைவு ஆகும். அது என்றுமுள்ள நிரந்தரமான வாழ்வாகும். ஒழுக்கம், சுயக் கட்டுப்பாடு, தியானம் ஆகியவற்றின்மூலம் மனிதன் இறைவனுகிறான். அதுதான் மதம்.

பிறருக்கு நன்மை செய்வதிலும், பிறரிடம் அன்பு காட்டு வதிலும், இரக்கம் காட்டுவதிலும், சத்தியத்திலும், வாழ்க் கையின் எல்லாத்துறைகளிலும் தூய்மையோடிருப்பதும் தான் மதம். மதம் என்பது நடைமுறை வேதாந்தம். வேதாந்தம் என்பது நடைமுறை மதம். ஆராய்ச்சி, வினவுதல், விசாரணை ஆகியவை வேதாந்தம் எனப்படும். அறிதல், உணர்தல், அனுபவம் என்பவை மதம் எனப்படும்.

ஒரே அளவுள்ள சட்டை எல்லோருக்கும் பொருந்தாது. தனி மனிதர்களின் மன நிலைகளும் தொன்று தொட்டு வரும்

பழக்கங்களும் வெவ்வேறானவை. எனவேதான் உலகில் வெவ்வேறு மதங்கள் இருக்கின்றன.

ஒவ்வொரு மதமும் நல்லதுதான். பரம்பொருளை நாடிச் செல்லும் எந்த பாதையும் நல்லது. பசுக்கள் பல நிறம், ஆனால் அவை கொடுக்கும் பால் ஒரே நிறமாகிய வெள்ளை. ரோஜா மலர்களில் பலவகைகள் இருக்கின்றன. அவைகளின் மணம் ஒன்றாகவே இருக்கின்றது. மதம் என்பதும் ஒன்றுதான். அதை நடைமுறையில் அனுசரிப்பதுதான் வேறுபடுகிறது. வேற்றுமை என்பது படைப்பின் முறை. மதமும் அதற்கு விலக்கல்ல.

## மதத்தின் சிறப்பான அம்சங்கள் :

மதம் என்பது ஒருவரால் திணிக்கப்பட்ட கொள்கை அல்ல; கொள்கைகளின் தொகுப்புமல்ல. மதம் என்பது கடவுளின் இயல்பு, சில நம்பிக்கைகளின் தொகுப்பு ஆகியவை அடங்கியதல்ல. அது ஒரு நம்பிக்கையோ, உணர்ச்சியோ மட்டுமல்ல. அது ஒருவர் வயிற்றுக் கோளாறாலோ, வயிற்றுக்கடுப்பு நோயாலோ வருந்தும்போது சொல்லும் பிரார்த்தனை அல்ல. அது முக்கியமாக நல்லதும் தொண்டு நிறைந்ததுமான ஒரு வாழ்க்கையாகும். மதம் என்பது தியானத்தோடு கூடிய வாழ்க்கையாகும். மதம் என்பது இறைவனில் வாழ்வதாகும். எவன் ஒருவன் அன்பு, இரக்கம், இறையுணர்வு, உண்மை ஆகிய பண்புகளை உடையவனாக இருக்கிறானோ, எவன் நம்பிக்கையுடனும், தெய்வ பக்தியுடனும் இருக்கிறானோ, அவன் உண்மையில் மதத்தில் ஈடுபாடு உள்ளவனாவான்.

நெற்றியில் சின்னங்களை அணிவதும், தலையில் சடைமுடியும், முகத்தில் தாடியும் வளர்த்துக் கொள்வதும், கடும் வெயிலிலும், கடும் குளிரிலும் நிற்பதும், காவி உடை அணிவதும், தலையை மழித்துக் கொள்வதும், மணி அடித்துக் கொண்டிருப்பதும், சங்கை ஊதுவதும், தாளத்தை முழக்குவது மட்டும் மதமல்ல. உலகியல் வாழ்க்கையின்

நடுவே நல்ல பண்புகளும், தூய்மையும், தொண்டும் அமைந்த வாழ்க்கைதான் உண்மையில் மதம் என்பதாகும்.

இறைவனில் வாழ்வதே மதம் என்பதாகும். அது இறைவனுடைய இயல்பைப் பற்றி வாதம் செய்வது மட்டுமல்ல. இறைவனை அறிவால் ஒத்துக்கொள்வது மட்டுமே உண்மையில் மதமாகாது. மதம் என்பது வாதத்துக்கு அப்பாற்பட்டது. நமக்குள்ளேயும் வெளியேயும் காணப்படும் வாழ்க்கையே மதமாகும். இறைவனை உணர்வதும், அவனாகவே மாறிவிடுவதும்தான் மதம்.

சொந்த விருப்பு வெறுப்புக்களும், கொள்கையில் பிடிவாதமும், வெறியோடும் குறிப்பிட்ட பிரிவில் மட்டும் நாட்டம் உள்ளவர்களுடைய கருத்துக்களும் உன் கண்களை மறைத்து மதத்தைப்பற்றி ஒரு குறுகிய நோக்கம் கொள்ளுமாறு செய்யாமல் இருக்கட்டும். கல்வியறிவில்லாத மக்களின் மதப்பழக்க வழக்கங்களை அனுசரிப்பதால் ஒருதலைப் பட்சமுடையவனாக மாறிவிடாதே. பகுத்தறிவையும் வேற்றுமைகளைக் கண்டறியும் தன்மையுடனும் மதம், தத்துவம் ஆகியவைகளிலுள்ள முக்கியமானவைகளையும் முக்கியமல்லாதவைகளையும் அறியும் தன்மை உனக்கு இருக்க வேண்டும். அப்போதுதான் நீ இன்பத்துடன் இருக்கலாம். எல்லா மதங்களின் முக்கியமான கோட்பாடுகளும் ஒரே மாதிரியானவைதான். அவை எல்லாம் ஒத்துப் போகின்றன. முக்கியமல்லாத பொருள்களில்தான் அவை மாறுபடுகின்றன.

## சமயச் சார்புள்ள வாழ்க்கையினால் உண்டாகும் நன்மைகள் :

சமயச்சார்புள்ள வாழ்க்கைதான் மிகவுயர்ந்த பேறு ஆகும். மதம் உலகியல் தொடர்பு, தூய்மையின்மை, நம்பிக்கைத்துரோகம் ஆகிய சேற்றிலிருந்து மனிதனை உயர்த்துகிறது. சமயத்தினால் ஒளி பெறாத அறிவினால்

பயன் ஏதுமில்லை. தத்துவத்தினுல் முடியாத காரியத்தை சமயம் செய்கிறது. மதத்தின் கோட்பாடுகளின்படி நடந்து கொண்டால் ஞானம், மரணமில்லா வாழ்வு, நிரந்தர அமைதி, நிலைபெற்ற பேரின்பம் ஆகியவற்றை அடையலாம்.

சமயத்தினுல் வருத்தமும் துன்பம் நீங்கப்பெறலாம். மதம் ஒருவரை முழுமைபெறச் செய்து உரிமையுடைய வராகச் செய்கிறது. மதம் ஒருவரைத் தளைகளினின்றும் விடுதலை பெறச்செய்கிறது. மதம் ஆன்மாவைப் பரமான்மா வோடு ஒன்றுபடச் செய்கிறது. மதம் மனிதனை பிறப்பு இறப்பு ஆகிய சுழலிலிருந்து விடுதலைபெறச் செய்கிறது.

மதம் என்பது சமுதாயத்தின் அடிக்கல். நன்மை, இன்பம் ஆகிய எல்லாவற்றின் ஆதாரம், தனிமனிதனின் பண்பு, வளர்ச்சி ஆகியவற்றிற்கான ஆதாரம். தனி மனிதனுக்கு உதவுவதன் மூலம் நாட்டின் முன்னேற்றத் திற்கும் உதவுகிறது. நாகரிகம், ஒழுங்கு, நல்லொழுக்கம், மற்றும் மனிதனுடைய நிலையை உயர்வுபெறச் செய்து நாட்டில் அமைதியை ஏற்படச் செய்வதும் மதத்தை செவ்வனே நடைமுறையில் பயில்வதால் ஏற்படும்.

மதத்தை ஒருவன் வாழ்விலிருந்து நீக்கிவிடுங்கள். அவன் வாழ்க்கை பயனற்றதாகி விடுகிறது. அவன் எதற் காகப் பிறந்தானே அந்த நோக்கத்தினின்றும் வெகுதூரத் திலிருப்பான். இவ்வுலக வாழ்க்கை வரண்டதாகவே காணப் படும். மதமில்லாவிடில் வாழ்க்கையே இல்லை. மதம்தான் வாழ்க்கையைப் பயனுள்ளதாகச் செய்கிறது. மனத்தில் அன்பு, பக்தி, அமைதி, மகிழ்ச்சி ஆகியவை தோன்ற வழி செய்கிறது. மதஎதிர்ப்புப் பிரசாரத்தினுல் மதவுணர்ச் சிக்குச் சிறிது காலம் தடை ஏற்படுவதுபோல் காணப்பட் டாலும், மனிதனுடைய மனதிற்குள் இருக்கும் மதவுணர்ச் சியை நிரந்தரமாக நீக்கிவிட எவராலும் முடியாது.

**உலக மதங்கள் :**

இந்து மதம், சொராஸ்டிரிய மதம், யூத மதம், புத்த மதம், கிறிஸ்தவ மதம், முகம்மதிய மதம் ஆகியவை உலகிலுள்ள ஆறு பெரிய மதங்கள். இந்து மதம் எவராலும் உண்டாக்கப்படவில்லை. மற்ற மதம் ஒவ்வொன்றும் யாராவது ஒருவரால் தோற்றுவிக்கப்பட்டதுதான். அந்த மதங்கள் அவர்களின் பெயரைத் தாங்கி நிற்கின்றன. புத்த மதத்தின் மற்றொரு வடிவமே ஜைன மதம். சீக்கிய மதம் பெரும்பாலும் இந்து மதத்தையும், சிறிதளவு இஸ்லாம் மதத்தையும் தழுவியது. மற்றுமுள்ள சிறு மதங்கள் எல்லாம் இப்படிப்பட்டவையே.

மத குருமார்களின் அகந்தை, தன்னலம் ஆகியவற்றின் காரணமாக ஒரு மதத்தின் முக்கியமான உண்மை மறைக்கப்பட்டபோதும், மக்கள் அதைத் தம் அறியாமையின் காரணமாக மறந்துவிட்டபோதும், ஒரு பெரிய ஞானி, தீர்க்கதரிசி அல்லது மதாசாரியார் தோன்றினர். அவர் அந்த உண்மையை வற்புறுத்திக்கூறி, அது மறக்கப்படுவதற்கு அல்லது மறைக்கப்படுவதற்குக் காரணமாக இருந்த தீங்கை நீக்கி, அந்த உண்மை சுய ஒளியுடனும், தூய்மையுடனும் புகழுடனும், பெருமையுடனும் பிரகாசிக்க உதவினார்கள்.

ஒரு காலத்தில் மக்கள் வேதத்தில் கூறியுள்ள அத்துவைதக் கொள்கையை மறந்தபோது, சொராஸ்டர் என்பவர் தோன்றி, அஹுராமஸ்தா என்ற ஒரே இறைவனை வணங்கும்படிக் கூறி, தேவர்களின் வழிபாட்டைக் கண்டித்தார்.

வைதிக மதம் சடங்குகளைப் பொருளின்றி கடைபிடித்து உயிர்களைப் பலியிடும் வழக்கத்தை மேற்கொண்டபோதும், தாழ்ந்த இனத்தைச் சேர்ந்த மக்கள் உயர் குலத்தவரின் வெறுப்புக்கும், இகழ்ச்சிக்கும் ஆளானபோது, கருணாமூர்த்தியான புத்தர் தோன்றி, உயிர்ப் பலியைத் தடுத்து, தாழ்ந்த குல மக்களின் நிலைமையை உயர்த்தினார்.

யூத குருமார்கள் அகந்தை நிறைந்தவர்களாக மாறிய போது, இயேசு கிறிஸ்து அவதரித்து யூத மதத்தைத் தூய்மைப்படுத்தினார். கிறிஸ்தவ மதம் உருவ வழிபாட்டை மேற்கொண்டு மூட நம்பிக்கைகளை ஆதரித்த போது, முகம்மதிய மதம் தோன்றி ஒருவனே தேவன் என்று கூறியது.

இம்மாதிரியே ஒவ்வொரு புதிய மதமும், பழைய மதத்தைச் சீர்திருத்தி அமைத்து அதிலிருந்த தவறுகளைப் போக்க முயன்றது.

## அனைத்து மதங்களின் அடிப்படை ஒற்றுமை:

தீர்க்கதரிசிகள் அனைவரும் இறைவனின் தூதர்களே. அவர்கள் மகா யோகிகள், தெளிவு பெற்ற ஆன்மாக்கள். அவர்கள் தெய்வீக உணர்வு பெற்றவர்கள். இறைவனைப் பற்றித் தாமே அறிந்து உணர்ந்தவர்கள். அவர்கள் சொல் சத்தியமானதும், புனிதமானதுமாகும். குரான், ஜெண்ட் அவஸ்தா, விவிலிய நூல் ஆகிய எல்லாம் பகவத் கீதைக்குச் சமமான புனித நூல்கள் ஆகும். எல்லாவற்றிலும் தெய்வீக ஞானத்தின் சாரம் அடங்கியுள்ளது. அகுராமஸ்தா, ஈஸ்வரன், அல்லா, ஜெஹோவா ஆகியவை ஒரே இறைவனின் வெவ்வேறு பெயர்களாகும்.

மதத்தின் அடிப்படை ஆதாரம் இறைவன். மதத்தின் சாரமாகிய அடிப்படைக் கோட்பாடுகளை ஞானிகள், ரிஷிகள் ஆகியவர்களுக்கு இறைவன் படைப்பின் தொடக்கத்தில் தெளிவுபடுத்தியுள்ளார். அவைகள் மிகப் பழைய நூல்களும், மனித வர்க்கத்தின் நூலகத்தில் உள்ள மிகப் பழமையான மறை நூல்களுமான வேதங்களில் காணப் படுகின்றன.

அனைத்து மதங்களின் அடிப்படைக் கொள்கைகள் அல்லது முக்கியமான கொள்கைகள் ஒரே மாதிரியானவை. அவை மனித இனத்தின் தோற்றத்திலிருந்தே இருக்கின்றன.

மதத்தைப் பொருத்த அளவில் புதிதான கண்டுபிடிப்பு எதுவும் இதுவரை ஏற்பட்டதில்லை. இனியும் ஏற்படாது. புதிய மதமோ அல்லது புதிய மதக்கோட்பாடு எதையுமோ உண்டாக்கியவர் எவரும் இல்லை. புதிய மதங்களை ஏற்படுத்தியவர் அனைவரும் மதக்கொள்கைகளைப் பரப்பியவர்களே தவிர புதிதாக உண்டாக்கியவர்கள் அல்ல.

உண்மையான மதம் என்பது ஒன்றுதான், அது சத்தியம், அன்பு என்ற மதம்தான். அது உள்ளமாகிய மதம். சேவை, தியாகம், துறவு என்னும் மதம் என்பதே அது.

சத்தியம் என்பது இந்து, முகம்மதியர், புத்தர், கிறிஸ்தவர் ஆகிய எவரின் தனி உரிமையும் அல்ல. சத்தியம் என்பது சீரானதும், நிலைத்ததும், மாறாததுமாகிய ஒன்று. சத்தியமாகிய மதத்தைப் பின்பற்றும் ஒருவன் ஒளி, அமைதி, ஞானம், ஆற்றல், பேரின்பம் ஆகியவை நிறைந்த பாதையில் செல்கிறான்.

## மதத்தில் பிற்போக்குநிலை காரணமும், போக்கும் முறையும்

அறியாமையின் காரணமாகவும் பதவி, மோகம் ஆகியவற்றின் காரணமாகவும் மனிதன் தன்னுடைய மதத்தைப் பற்றிய அனைத்தையும் மறந்துவிடுகின்றான். அவன் மதச்சார்பற்றவனாகிறான். அதனால் ஒரு மிருகத்தைப் போன்ற நிலையை அடைகிறான். ஒழுக்க நெறியைப் பற்றிய உணர்வே அவனுக்கு இல்லை. தீங்கு செய்கிறான். தன்னையே பாழாக்கிக் கொள்கிறான். அவன் கொலை, கொள்ளை, தீ வைத்தல் ஆகிய செயல்களில் ஈடுபடுகிறான். பொதுவாக அவன் காட்டுமிராண்டியைப் போல வாழ்கிறான்.

பலர் புத்தமதத்தைப் பற்றிப் பிரசாரம் செய்கிறார்கள். ஆனால் அவர் — ஆசைகளை விடாமல், உயிர்களுக்குத் துன்பம் செய்கிறார்கள். கிறிஸ்தவ மதத்தை உபதேசம் செய்யும்

பலரிடம் அன்பும், மன்னிக்கும் இயல்பும் இல்லை. இஸ்லாம் மதத்தைப் பரப்பும் பலரிடம் சகோதர உணர்வு காணப் படுவதில்லை. இந்து சமயத்தைப் பரப்பும் பலரிடம் மனிதர்கள் அனைவரிடமும் தெய்வீகத்தன்மையைக் காணும் பண்பு இல்லை. மக்கள் உபதேசத்தைப் பிழைக்கும் வழி யாகவும், செயல் முறையை வெறுக்கத்தக்க முறையிலும் கொண்டுள்ளார்கள்.

எனவே உலகத்தில் தீமை இருப்பதற்குக் காரணம் சத்தியம் இல்லாமலிருப்பதாலும், மதங்கள் காரணமாகவும் அல்ல. இந்த முக்கியமான குறிக்கோள்களையும், மதங் களையும் பின்பற்றுகின்றவர்கள் இல்லாததால் தான் தீமை மலிந்து இருக்கிறது.

மதங்கள் எல்லாவற்றையும் பின்பற்றுகின்றவர்களுக்குச் சரியான முறையில் விளக்கம் அளிக்க வேண்டியதுதான் முதலில் தேவையானது. உன் மதத்தைப் பின்பற்றுகின்றவர் முன்னே, அதனுடைய முக்கியமான கொள்கைகளை எடுத் துரைத்து, அவற்றை அவர்களுடைய தினசரி வாழ்க்கையில் பின்பற்றச் செய். நடைமுறைப் பயிற்சி இல்லாதபடியால், அனைவற்றையும் மக்கள் விதிவழியே நடக்க விட்டுவிடுகிறார் கள். ஞானம் ஒருவன் வாழ்க்கையை நன்னெறிப்படுத்தா விடில், அதனால் பயனில்லை. தன்னலமற்ற இயல்பும், அன்பும் உபதேசத்தால் மட்டும் உண்டாகாது. தாமே அதன்படி நடந்து காட்டுவதன்மூலம் அவற்றின் சிறப்பை உணர்த்தி, மற்றவர்களிடம் பரவச் செய்ய வேண்டும். எனவே ஒவ்வொருவரும் அவரவர்களுடைய மதத்தை நடை முறையில் பயின்று, வாழ்க்கையின் இலட்சியத்தை அடைய முயல வேண்டும். அதிலிருந்து மதத்தின் வாயிலாகக் கோயில்களும், மசூதிகளும், மாதா கோயில்களும் ஏற்படு வதைக் காட்டிலும் ஞானிகளும், யோகிகளும் தோன்றட்டும்.

## ஒழுக்க நெறிகள்

ஒழுக்க நெறிகள் என்பவை நல்லொழுக்கத்தைப்பற்றிக் கூறுவதாகும். ஒழுக்கம் என்பது அறத்தோடு கூடிய வாழ்க்கையைக் குறிக்கும்; குறிப்பாகப் பாலுணர்வில் தூய்மையாக இருப்பதைக் குறிக்கும்.

ஒழுக்க நெறியில் முழுவளர்ச்சி இல்லாவிட்டால் ஆன்மீக முன்னேற்றம் இல்லை. ஆன்மீக முன்னேற்றம் இல்லாவிட்டால் ஆன்மீக விடுதலை கிடையாது.

சாதகர்கள் அனைவரும் வீட்டைவிட்டு வெளியேறிய உடனேயே சமாதியிலும் தியானத்திலும் ஈடுபட முயற்சிக்கிறார்கள். ஒழுக்க நெறிகளைப்பற்றி அவர்கள் ஒருசிறிதும் கவலைப்படுவதில்லை. பதினைந்து ஆண்டுகளாகத் தியானம் பயின்ற பின்னரும் மனம் அதே நிலையிலிருக்கிறது. பொறாமை, வெறுப்பு, தம்மைப்பற்றிய உயர்வு மனப்பான்மை, கர்வம், அகந்தை ஆகிய குணங்களில் எவ்வித மாறுதலும் இல்லை. ஒழுக்க நெறியில் பக்குவமில்லாவிடில் தியானம் அல்லது சமாதியில் ஈடுபட முடியாது.

ஒழுக்க நெறியில்லாத வாழ்வு உயிரற்ற வாழ்வாகும். ஒழுக்க நெறியைப் பற்றிக் கவலைப்படாதவன் இறந்துபட்டவனைவிட மோசமானவன். சாரமற்ற அல்லது திரிந்த அறிவையுடையவனைவிட ஒழுக்க நெறியைப் பின்பற்றுகின்றவன் மேலானவன். ஒழுக்க நெறியுள்ளவன் அதில்லாமல் மதசம்மந்தமானவையும் விந்தையானவையுமான ஆற்றல்களைப் படைத்தவனைவிடச் சிறந்தவனாவான்.

## ஒழுக்க நெறியும் மதமும் :

ஒழுக்க நெறியும் நல்லொழுக்கமும் ஆன்மீக வாழ்க்கை யின் அடிப்படையாகும். ஒழுக்க நெறியில்லாத தத்துவம் ஆகாயக்கோட்டையாகும்; மதம் முற்றிலும் பொருளற்றது. நல்லொழுக்கமில்லாத ஆன்மீகம் ஏமாற்று வித்தையாகும். ஆன்மீகம், மதம், ஒழுக்க நெறி ஆகியவை ஒரே பொருளுள்ள வெவ்வேறு சொற்களாகும். அவற்றிற்கு வெவ்வேறு பொருள்களைக் காணமுயல்வது தவறாகும்.

நல்லொழுக்கம் என்பது நடைமுறையிலான மதமாகும். மதம் என்பது நல்லொழுக்கத்திற்கான கொள்கையாகும். ஒழுக்க நெறியான கட்டடத்தை அமைப்பதற்கு முடிவான விவரங்களைக் கொடுப்பதுதான் மதம். மத உணர்வோடு இல்லாத ஒழுக்க நெறி உண்மையானதும் நடைமுறைக் கேற்றதும் அல்ல.

மதத்தோடு இணையாத நல்லொழுக்கம், வேரில்லாத மரம், மணலில் கட்டப்பட்ட வீடு, நீர் கொடுக்கும் ஊற்றில்லாத ஆறு. மதத் தொடர்பில்லாத நல்லொழுக்கம் வேரில்லாத மரம். எனவே அது வழக்கங்களின் அடிப்படை யில் அமைந்ததும், விரைவில் மறையக்கூடியதும், அடிக்கடி மாறக்கூடியதும், விருப்பமிருந்தால் ஏற்றுக்கொள்ளக் கூடியதும் ஆகும். இறையன்பு என்னும் சரியான பாதை யில் நல்லொழுக்கத்தை அமைத்துக்கொள். இறைவனில் லாத நல்லொழுக்கம், சுக்கானில்லாத படகாகும்.

ஒழுக்க நெறிகள் — கீழ்திசை நாடுகளிலும் மேல்திசை நாடுகளிலும் "கொலை செய்யாதே. மற்ற உயிர்களைத் துன்புறுத்தாதே. உன்னைப்போலவே எல்லோரையும் நேசி" என்று அனைத்து மதங்களும் கூறுகின்றன. ஆனால் அதற்குக் காரணம் எதுவும் கூறப்படவில்லை. ஆத்மாவைப்பற்றி மேலைநாட்டு ஒழுக்க நெறிகளில் எதுவும் கூறப்படவில்லை.

மேலைநாட்டுத் தத்துவஞானிகளின் ஒழுக்க நெறி மேலெழுந்தவாரியாக உள்ளது. அதில் ஆழ்ந்த ஞானமில்லை. சமூகத் தொண்டு, தன்னலங்கருதாமை, மனிதத் தன்மை, கொடையுள்ளம் ஆகியவற்றைப்பற்றி மிகச் சிறிதளவே சொல்லப்பட்டுள்ளது. நல்லது, கெட்டது — சரி, தவறு — நல்லொழுக்கம் — நன்னடத்தை ஆகிய வற்றைப்பற்றி ஒரு சிறிதளவே கூறப்பட்டுள்ளது. இந்துக் களுடைய நல்லொழுக்க நெறி மிகவுயர்ந்தது, மிக நுண்ணியது, மிக ஆழமானது. உயிர்களின் ஒருமைப்பாட்டையும் உணர்வுகளின் ஒன்றுபட்ட தன்மையையும் விளக்கும் வேதாந்தத்தின் மிகவுயர்ந்த தத்துவத்தின் அடிப்படையில் இந்துக்களின் ஒழுக்க நெறி அமைந்துள்ளது.

ஆன்மா அல்லது உயிர் என்பது ஒன்றுதான். உடல்கள் அனைவற்றிலும் ஒரே உயிர்தான் பரவி இருக்கிறது. விலங்குகள், பறவைகள், மனிதர்கள் ஆகியவர்களுக்கு உயிர் பொதுவானது. உயிர் வாழ்வதும் பொதுமையானது தான். இவைகளுக்கு இடையே பொதுவான ஓர் உணர்வு இருக்கிறது. பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யும்போது நீ உனக்கே தீங்கிழைத்துக் கொள்கிறாய். மற்ற மனிதர் களுக்குச் சேவை செய்யும்போது, நீ உனக்கே சேவை செய்து கொள்கிறாய். மற்றவர்களுக்குத் தொண்டு செய் வதன் மூலம் உன் உள்ளத்தைத் தூய்மைப் படுத்திக்கொள் வதால், தெய்வீகவொளி உனக்குள் பரவி, நீ முக்தி அல்லது முடிவான விடுதலையைப் பெற வழி ஏற்படுகிறது. இதுதான் இந்துக்களின் ஒழுக்க நெறி. இந்துக்களின் ஒழுக்க நெறியைக் குறித்த விதிகளுக்கான அடிப்படைத் தத்துவம் இதுதான்.

முழுமையான தன்னடக்கம், பிரம்மசரியம் ஆகிய வற்றைப்பற்றிப் போதிய அளவு மேலைநாட்டு ஒழுக்க நெறிகள் எடுத்துக் கூறவில்லை, தீயகுணங்களை விலக்கி, நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதைப் பற்றியும் அவற்றில் போதுமான அளவு விளக்கங்கள் இல்லை. தவம், துறவற

நிலை, புலனடக்கம் ஆகியவற்றைப் பற்றியும் அவை எடுத்துக் கூறவில்லை, கீழைநாட்டு ஒழுக்கநெறிகள் மிகவும் கருத்துச் செறிவு நிறைந்தவை. அங்கு 'தமம்' அல்லது ''அனைத்துப் புலன்களின் கட்டுப்பாடு'' என்னும் பொருளுக்கு மிகவும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. தீவிரமான துறவு நிலை அங்கு உள்ளது. வெளியே செல்ல முயலும் புலன்களை முற்றிலும் அடக்குவதைப்பற்றி அங்கே கூறப்பட்டுள்ளது.

மேலைநாட்டு ஒழுக்க நெறிகள் ஒருவரைப் பயனற்ற தத்துவ ஞானியாக மாற்றிவிடும். ஆனால் ஞானியாகவோ யோகியாகவோ அதனால் மாற்ற இயலாது. கீழைநாட்டு ஒழுக்க நெறிகளோ ஒருவரைத் தீவிரமான செயல்பாடுள்ள ஞானியாகவோ அல்லது யோகியாகவோ மாற்றும் இயல் புள்ளவை. அது ஒரு மனிதனை தெய்வத்தன்மையுள்ள வனாக மாற்றி அமைத்து விடுகிறது.

## ஒழுக்க நெறிகளுக்கான வழிகாட்டிகள்:

தர்ம சாஸ்திரங்கள் அல்லது அறநூல்கள், ஞானிகளின் எடுத்துக்காட்டுகள், உள்மனம் என்னும் மனசாட்சி, காலம் காலமாக ஊறிப்போயிருக்கும் பழக்கங்கள் ஆகியவைதான் நல்லொழுக்கத்தைப் போதிக்கும் வழி காட்டிகளாகும்.

பக்குவமடையாத மக்கள் தமக்குள்ளே சிந்தித்துப் பார்க்கமுடியாது. தன்னலம் அறிவை மயக்கிவிடுகிறது. சிறிதளவே தன்னலம் உடையவனாக இருந்தாலும், எது சரி, எது தவறு என்று கண்டு உணர ஒருவனால் முடியாது. மிகவும் தூயதும், ஆழமானதும், கூர்மையானதுமான அறிவு இதற்குத் தேவை. எனவே நல்லொழுக்கத்துக்கான விதிகள், மனு, யாக்ஞவல்கியர் போன்ற தீர்க்கதரிசி களான ஞானிகளால் கூறப்பட்டுள்ளன.

அறநூல்களில் கூறப்பட்டுள்ள நல்லொழுக்க முறைகளை யும் விதிகளையும் சிந்தித்துப் பார்க்கத் தேவையான ஆற்றலும், காலமும் உனக்கில்லாத காரணத்தால், முனிவர் கள் அல்லது ஞானியர்களால் கூறப்பட்டுள்ள நல்லொழுக்கத் திற்கான விதிகளை நன்கு அறிந்து அவற்றில் ஒரு சிறிதும் தவறாமல் பின்பற்றலாம்.

## ஒழுக்க நெறிகளின் பொதுத்தன்மை :

ஒவ்வொரு மதத்திலும் அதற்குரிய ஒழுக்க நெறிகள் உள்ளன. இயேசுநாதரின் மலைப்பிரசங்கமும், பத்து கட்டளைகளும் மனிதகுலத்தின் மேம்பாட்டுக்கான ஒழுக்க நெறிகளைத் தமக்குள்ளே அடக்கியுள்ளன. புத்தர்பிரானின் எண்வகை மார்க்கங்கள், ஒழுக்க நெறிகளின் சாரமாக அமைந்துள்ளன. பதஞ்சலி முனிவரின் இயமம், நியமம் ஆகியவை ஒழுக்க நெறிகளைக் குறிப்பவை. மனுஸ்மிருதி, யாக்ஞவல்கிய ஸ்மிருதி, பராசர ஸ்மிருதி ஆகியவை மனித குலத்தின் நல்லொழுக்கத்திற்கான விதிமுறைகளைக் கூறு கின்றன. பகவத் கீதையில் கூறப்பட்டுள்ள மூவகை யோகங் களும் ஒழுக்க நெறிகளே தவிர வேறல்ல,

நல்லொழுக்கத்திற்கான அடிப்படைக் கொள்கைகள் எங்கும் ஒரே மாதிரியானவை. ஏனென்றால் அவைகள் இறைவனிடமிருந்து தோன்றியவை. எல்லாவற்றிற்கும் மேலான பரம்பொருளாகிய இறைவனிடமிருந்துதான் இந்த விதிகளாகிய கட்டளைகள் தோன்றியுள்ளன.

நல்லொழுக்கம் என்பது அனைவர்க்கும் பொதுவானது. இந்தப் பொதுத்தன்மை நீங்கிய நல்லொழுக்கம் தானே மடிந்துவிடும்.

மற்றவர்களுக்கு எவ்விதமான நன்மையும் பயக்காத செயலையும், எதைச் செய்தால் பின்னால் நீ வருத்தமோ வெட்கமோ அடைவாயோ அந்தச் செயலைச் செய்யாதே. பிறரால் பாராட்டத்தக்கவையும், உனக்கும் மற்றவர்களுக்கும் நன்மை பயக்கும் செயல்களையுமே செய். நல்லொழுக்கத்தைப் பற்றிய சுருக்கம் இதுதான். ஒருவருக்கொருவர் தீங்கு செய்து கொள்வதைத் தடுப்பதற்காகத்தான் நல்லொழுக்க விதிகள் ஏற்பட்டுள்ளன.

ஒரு மனிதன் ஏன் அறவழியில் வாழவேண்டும்? சிலவற்றை மட்டும் அவன் செய்ய வேண்டும்?' ஏன் சிலவற்றைச் செய்யக் கூடாது? அறவழியில் வாழாவிட்டால், மனிதன் விலங்குகளினின்றும் உயர்ந்தவனாக இருக்கமாட்டான். மனிதனை அவனுடைய விலங்கு இயல்பினின்றும் மாற்றி தெய்வீக இயல்புடையவனாக மாற்றியமைப்பதுதான் நல்லொழுக்க நெறியின் நோக்கமாகும்.

## நல்லொழுக்கத்தின் வகைகள் :

மனிதர்களுக்கான ஒழுக்க நெறிகள், இல்லறத்துக்கான ஒழுக்க நெறிகள், சமூகத்துக்கான ஒழுக்க நெறிகள், நாட்டுக்கான ஒழுக்க நெறிகள், தொழிலுக்கான ஒழுக்க நெறிகள் என்று தனித்தனியே இருக்கின்றன. ஒரு மருத்துவருக்கு அவருடைய தொழிலுக்கான ஒழுக்க நெறிகள் இருக்கின்றன. மருத்துவர் தன்னிடம் வரும் நோயாளிகளின் இரகசியங்களை மற்றவர்களிடம் சொல்லக்கூடாது. நோயாளிகளிடம் கருணையுடனும் பரிவுடனும் நடந்து கொள்ளவேண்டும். தண்ணீரை ஊசியின் மூலம் செலுத்திவிட்டு விலைவுயர்ந்த மருந்துக்கான தொகையை வசூல் செய்யக்கூடாது, வீட்டுக்குச் சென்று பார்த்து வந்ததற்கான கட்டணத்தைத் தரவில்லை என்றாலும் தாமே வலிய சென்று நோயாளியை கவனிக்க வேண்டும். ஏழைகளுக்கு இலவசமாக மருத்துவம் செய்ய வேண்டும்.

வழக்கறிஞர்களுக்கான ஒழுக்க நெறிகளும் உண்டு. பொய்சாட்சிகளைத் தயார் செய்யக்கூடாது. பணம் பெற வேண்டி ஆதாரமில்லாத வழக்குகளை ஏற்றுகொள்ள கூடாது. ஏழைகளுக்கு கட்டணமின்றியே வழக்குகள் நடத்த வேண்டும். வியாபாரிகளுக்கான ஒழுக்க நெறிகளும் உண்டு. அவர்கள் அதிக இலாபம் எதிர்பார்க்கக் கூடாது. அதிக அளவில் அறம் செய்ய வேண்டும். தொழிலுக்காகக் கூடப் பொய் பேசக் கூடாது,

---